

பகவான்

# ஸ்ரீ காரைச் சித்தர்

ஆசிரியை :

ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள்

பிரசுரம் :

சித்தாஸ்ரமம்

நுங்கம்பாக்கம், சென்னை-6



சாந்தவெளி

**ஸ்ரீ வீர ஆஞ்சநேயர்**

# 1. சாந்தவெளி

ஒரு ஏகாந்தமான தலம். அந்த ஏகாந்தமான தலத்திலே ஒரு பிரம்மாண்டமான ஆல விருட்சம். சுற்றிலும் இறங்கிய விழுதுகள், ஓர் ஆயிரக்கால் மண்டபத்தையே சிருஷ்டித்து விட்டிருந்தன. அந்தப் பரந்தவெளியிலே பூராவும் மேலே அண்ணாந்து பார்த்தால், எங்கோ எட்டாத உயரத்தில் பல கிளைகள். கிளைக்குக் கிளை ஒன்றையொன்று தாவித் தழுவி நீலவானை மறைத்துப் பச்சைப் பந்தல் வேய்ந்திருப் பதைக காணலாம். சொட்டுத் தண்ணீர் கீழே விழுமோ என்பது சந்தேகமே. இந்தப் பந்தலின் கீழ் பரந்த மணல் மேடு. அந்த மணல் மேட்டின் தென்புறம் குடமுருட்டியாறு. வடபுறம் பயிருக்கு உயிரளிக் கும் பொன்னி நதியின் சிறு வாய்க்கால். இப்படியாக இத் தலத்தைச் சுற்றிலும் நதியின் படுகையும் வயற்காடும், சிற்றூர்களுமாகத் துலங்கின. அந்த தலத்திலே வேறொரு செடி கொடியோ, புற் பூண்டோ, மரமோ, சிறு குடிலோ கூட இல்லை. அந்த மணற்பாங்கான தலத்திலே இந்த ஆலமரம் ஒன்றே தனியரசு புரிந்து வந்தது.

ஓர் அற்புதம் விளைந்தது அந்த ஆலமரத்தடியிலே! சுமார் முன்னூறு வருடங்களுக்கு முன்பாகவே இருந்து வருவதாகக் கூறப்படும் நான்கு அடி உயரமுள்ள ஓர் ஆஞ்சநேயர் சிலை, அங்கு கோயில் கொண்டுள்ளது. அது ஏற்பட்ட காலத்தையோ பிரதிஷ்டை செய்யப் பட்ட காரணத்தையோ கூறுபவர் எவருமிலர்.

ஒரு காலத்திலே அண்மையிலுள்ள சிற்றூரைச் சார்ந்த ஒரு குடியானவன்; மாட்டிடையன் எனலாம். அவனுக்குச் 'சொந்தமான மாடு ஒன்று'; அது காணமல் போய்விட்டது. மூன்று நாட்களாகத் தேடி அலையாத இடம் இல்லை. குடும்ப ஜீவாதாரமாக இருந்து வந்த வாயில்லாத ஜீவன்; அதுவும் கன்று போடும் தறுவாயில் காணமல் போய் விட்டது என்ருல் அந்த ஏழை கதறி அழாமல் என்ன செய்யக் கூடும்! மூன்ரும் நாள் இரவு சற்றுச் சோர்ந்து கண்ணுறங்கினன். பளிச்சென்று கனவில் ஒரு தோற்றம். கனிவு தரும் பார்வையும், முதிர்ந்த வயதும் கொண்ட ஒரு பெரியவர் தோன்றி, இங்கே ஆல

மரத்தடிக்கு வா, உன் மாட்டைக் காண்பாய்' என்று கம்பீரமான குரலில் கணீரென்று அழைக்கக் கேட்டான்.

பொழுது புலர்ந்தது. எழுந்து ஓடினன் அத்திடலை நோக்கி. எப்படியோ குடமுருட்டி யாற்றைக் கடந்து அந்த ஆலமரத்தடிக்கு வந்தான். அங்கே மரத்தடியில் கோயில் கொண்டிருந்த அந்த ஸ்ரீ ஆஞ்சநேயர் முகமண்டலம கனவில் கண்ட பெரியவர் முகம் போலத் தோன்றியது. அவர் காலடியிலே எருமையையும், அன்றே பிறந்த கன்றையும் கண்டான். கண்களிலே நீர் மல்கிற்று. கரம் குவித்து, சிரம் வணங்கி, தரையிலே நெடுங்கட்டையாக விழுந்து வணங்கினன். 'என் மாட்டைக் காப்பாற்றிக் கொடுத்த தெய்வமே! என் பெண்டு பிள்ளைகள் பிழைக்க வழி செய்த கடவுளே! உனக்கு நான் என்ன பூசை போடுவேன்!' என்று இறைஞ்சினன். இச் செய்தி சுற்று வட்டாரங்களில் பரவிற்று. அன்று முதல் இந்த ஆல மரக் கடவுளைத் தரிசிக்க சுற்றிலுமுள்ள மக்கள் கூட்டம் கூட்டமாக வரத் தலைப்பட்டனர். பிரார்த்தனைகள் செலுத்தினர். பால் அபிஷே கங்கள் செய்தனர். மக்களின் வேண்டுதலுககு உடனுக்குடன் செவி மடுத்து செயலாற்றும் திறமபடைத்த கடவுளாகப் போற்றி வழிபடு கின்றனர், இந்த வீர ஆஞ்சநேயக் கடவுளை அநத வட்டாரக குடி மக்கள்.

ஆயிரக் கணக்கான ஏழைக் குடிமக்களின் குறை தீர்க்கும கடவுளாக விளங்கும் இந்த ஆல மரக் கடவுளுககு ஓர் ஆலயம கட்ட வேண்டுமென வெகு காலமாக முயற்சி செய்து பார்த்தனர் அவர்கள். ஆனல் ஒவ்வொரு தடவையும அவாகள் எணணம் நிறைவேறுதபடி பல இடையூறுகள் ஏற்பட்டன. எனவே ஆலயத்தை விருமபவில்லை அனுமார் என முடிவு செய்தனர் மககள்.

இந்த வட்டாரங்களிலே சுற்றிக்கொண்டிருந்த ஒரு ஞான சித்தர் ஒரு சமயம் இந்த ஆஞ்சநேயக் கடவுளைத் தரிசிக்க வந்தார். சித்தரின் மனம் இந்த ராமதாசரிடம் ஈடுபடலாயிற்று. அனுமானுக்கு அமுது செய்து படைப்பதற்காகவாவது ஓர் கட்டிடம் தேவை என தீர்மானித் தார் சித்தர். நிதி குவிந்தது; ஒ ரு பாகசாலைக்கு கால்கோள்விழா நடந்தது. ஒரு கிணறு தோன்றியது. ஊடே சில இடையூறுகளும் தோன்றின. ஆனாலும் அயரவில்லை சித்தர்! பல சிரமங்களுககு இடையே ஒரு உக்கிராண அறையையும் எழுப்பினர். சித்தரின் சிரத்தையும், பக்தர் தம் பணியும் சேர்ந்து உருவாக்கிவிட்டது – ஓர் அமுது படைக்கும் பாகசாலையை.

பாகசாலைத் திறப்பு விழாவிற்கு தேதி குறிப்பிடப்பட்டது. ஆவணி மாதத்தின் கடைசி நாட்கள், மாரி கால மழை பெய்யத் தொடங்குமோ என்ற ஐயம். ஆயிரக் கணக்கான பக்தர்கள்கூடி இருந்தனர்—அந்த குறிப்பிட்ட தேதியிலே, அந்த மணல் திடலிலே! ஞான சித்தரின் அடியார்கள் பலர் டில்லி, சென்னை முதலிய நகரங்களிலிருந்தும் அங்குவர இருந்தனர். வேகமாக வெள்ளம் பெருகியோடும குடமுருட்டி ஆற்றுக்கோ அங்கே பாலமில்லை. ஆற்றைக கடந்தா லன்றி அந்த ஆல மரத்தடியை, பெருவாரியான மக்கள் அடைய சாத்தியமில்லை. சுற்றியுள்ள சிற்றூர்களிலெல்லாம் ஆஞ்சநேய பகதர் கள் பலர் இருந்தனர். அன்று ராமன் சீதையைத் தேடிச் சென்ற போது அணை கட்டவில்லையா ? சித்தாரோ மூங்கில் பாலம வேண்டு மென்றார். சித்தர் உத்திரவிட மூங்கில் கழிசளும, பனை மரப் பலகைகளும் வண்டி வண்டியாக வநது குவிந்தன.



ஓடும் நதியிலே குதித்து மூங்கிற் கழிகளை நட முற்பட்டனர் சித் தரும் பக்தரும். ஓரிரண்டு நாட்களில் செம்மையான, சுமார் 300 அடி நீளமுள்ள மூங்கிற் பாலம் அமைந்துவிட்டது. என்னே அதிச யம்! வந்தனர் அரசாங்க அதிகாரிகள்! ‘ எங்கள் அனுமதி பெறமல் இப்பாலத்தை யார் கட்டியது ?’ என்று வினவினர் ஊர் மக்களை. செய்தி அறிந்து சித்தர் வந்தார். கடவுள் திருப்பணியிது ஆட்சேபிக் கக் கூடாது என்று அமைதியாக சாந்தமாக பதிலளித்து விபூதி பிரசாத மும் வழங்கினர். ஆற்று மணலை அள்ளிக் கையில் கொடுத்தார்.

அது வெல்லக் கட்டியாக மாறியது. தலைமை சூப்பரின்டெண்டும், இன்ஜினியருமாக திகைத்துப் போயினர். பிறகு அந்த மூங்கில் பாலத்தைச் செவ்வனே சோதித்துப் பார்த்தனர். ஆச்சரியம் தாங்கவில்லை அவர்களுக்கு! இரு ஆண்டுகள் தாங்கக்கூடிய இத்தனை வலுவான பாலமவெள்ளம் பெருகியோடும்நதியின் மத்தியிலே எந்தவித இயந்திர சாதனமும், நிபுணரின் உதவியுமின்றி அதுவும இரண்டொரு தினங்களுக்குள்ளே கட்டி முடித்திருப்பதைக் கண்டு பிரமித்தனர். ஆல மரத்தடி ஆஞ்சநேயரின் சக்தியையும், சித்தரின் அற்புத சாதனையையும் பாராட்டி அந்த பாலத்திற்கான அனுமதியையும் அளித்துச் சென்றனர் வந்த அரசாங்க அதிகாரிகள்.

8-9-60 அன்று குடமுருட்டி யாற்றங்கரையினிலே அந்த பிரம்மாண்டமான ஆல மரத்தினடியிலே கோயில் கொண்டுள்ள ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமிகளுக்கு பாகசாலை திறப்பு விழாவையொட்டி பாலாபிஷேகங்களும் பூசை முதலியனவும வெகு சிறப்பாக நடைபெற்றன. ஐந்து மூட்டை செந்நெல் அரிசி கொண்டு பொங்கல், புளியோதரை முதலிய பகுவன்னங்கள் செய்யப்பட்டன சமாராதனைக்காக.

அந்த ஆல மரத்தினடியிலே எங்கும் பூப் பந்தல்! பச்சோலைப் பந்தல்! ஆலம விழுதுகள் தோறும் தென்னை, கமுகு குருத்துக்களும குலைகுலையாக செவ்விளநீர் தேங்காய்களும், வாழைக் குலைகளும குலுங்கின. ஆப்பிள் திராக்ஷை போன்ற பழ வகைகளும அநுமானின் பிரீதிக்காககொத்துக் கொத்தாகக் காட்சி அளித்தன மரக கிளைகளுடே. டைனமோ செட்டுடன் வந்து அந்த மணல் திடல் பூராவும் மின்சார வண்ண விளககுகளால் ஜகஜ்ஜோதியாக விளங்கச் செய்துவிட்டார் ஒரு பக்தர்.

சுமார் ஐயாயிரம மக்கள் கூடிவிட்டனர் அங்கே! காலை முதற்கொண்டு நாம சங்கீர்த்தனங்கள், பஜனை பாராயணங்கள், கதாகால க்ஷேபம், இன்னிசைக் கச்சேரிகள் இடைவிடாது நடைபெற்றன. அநுமன் சந்நிதியிலோ வேத கோஷமும் சந்நிதி மணியோசையும், பக்திப் பரவசப் பாடல்களும் ஒலித்துக்கொண்டே இருந்தன. சித்தருடைய சித்து விளையாட்டும், ஸ்ரீ ஆஞ்சநேயக் கடவுளின் அருட் கடாட்சமும சேர்ந்து அங்கே கூடியிருந்த பல்லாயிரக் கணக்கான மக்களின் மனதையும் ஒருமுகப்படுத்திப் பரவச நிலைககு ஈர்த்துச் சென்று விட்டது என்று சொல்லுமபடி இருந்தது அந்நேரம. முதலில் வெறும் மந்தவெளியாக இருந்த ஒரு திடல் மக்கள் கூடும காரணமாக சந்தைவெளியாக மாறி, பிறகு இன்று இவ்வைபவத்தின் காரணமாகச்

சாந்த வெளியாகத் திகழும் அற்புதக் காட்சியை என்னவென்று சொல்வது!

குடமுருட்டி ஆற்றின் குறுக்கே தோன்றிய அந்த அற்புதமான மூங்கில் பாலத்தைக் கண்ட மக்கள், வியப்புற்று நின்ற நிலையிலே நின்றுவிட்டனர். அந்த பாலத்தைக் கடந்து சென்று மக்கள் கூட்டம் கூட்டமாக ஸ்ரீ வீர ஆஞ்சநேயரின் திவ்ய தரிசனத்தைப் பெற்றுத் திருப்தியுடன் திரும்பிச் சென்றனர். கண் கண்ட — நடமாடும் தெய்வமாக தம் அடியார்களுக்குத் தென்படும் அந்த ஞான சித்தரைத் திரள் திரளாக மக்கள் வந்து சூழ்ந்துகொண்டே இருந்தனர். அவர் அருளும் அருள் பிரசாதத்தையும் பெற்று வணங்கி, மக்கள் கூட்டம் திரும்பிச் செல்லச் செல்ல மேன்மேலும் புதிய கூட்டம் அலைமேல் அலைபோல, அவரை வந்து சூழ்வதைக் கண்டேன். இந்தக் கண்கொள்ளாக் காட்சி பல ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டிலே அண்ணல் காந்தியடிகள் நடத்திய பிரார்த்தனைக் கூட்டத்தை என் ஞாபகத்திற்குக் கொண்டுவந்து நிறுத்தியது. வியப்பால் மெய் சிலிர்க்கப் பரவசமடைந்தேன்.

நாம் கல்வித் துறையிலே மேனுக்கிச் செல்லச் செல்ல, நமக்கு ஆத்மீக துறையிலே பரிச்சயம குறைந்துகொணடே போகிறது. விஞ்ஞான உதவி மூலமும், பல இயந்திர சாதனைகளின் மூலமும உலகில், எங்கெங்கோ பல அற்புதங்கள் செயல்படுவதை நாம கேள்விப்படுகிறோம். கண்ணால் காணவும செய்கிறோம்.

ஆனல், பாரத நாட்டிலே, முக்கியமாக தமிழ் நாட்டிலே எங்கெங்கோ பல மூலை முடுக்குகளிலிருந்து வரும் நாம் கேள்விப்படும, அறபுத நிகழ்ச்சிகளைப் பறறியச் செய்திகளை நாம லட்சியம செய்கிறதில்லை.

கடவுள் சக்தி, நம நாட்டில் நடமாடும், மகாத்மா, சித்தர்களின் அரிய சாதனைகள், இவை எவ்வித இயந்திர சாதனைகளின் உதவியின்றி, விஞ்ஞான ஆராய்ச்சிக்கும எட்டாத நிலையிலிருந்து எவ்வளவு அற்புத நிகழ்ச்சிகளை நடத்திக் காட்டக்கூடும என்பதை நேரில் தம் கண்ணாலேயே கண்ட ஒருவர் வந்து சொன்னாலும்கூட நாம் அதை எளிதில் நம்புவதுமில்லை.

சமசயாத்மா வினச்யதி அதாவது சந்தேகம் அடைகிறவன் அழிவை அடைகிறன் எனபதுதைப்போல் நமமில் பலருக்கு இவ்வித அற்புதங்களில் உதிக்கும சந்தேகஙகளை எண்ணும்போது கீதைப் பேருரையின் உந்த வாக்கியமதான் நினைவிற்கு வருகிறது.

கல்வித்துறையில் சிறிதும் முன்னேற்றம் அடையாத கிராம மக்களோ வெனில் காதால் கேட்ட அளவில் இந்த அற்புத நிகழ்ச்சிகளைக் கடவுள் திருவிளையாடல்தான் என நம்புகின்றனர். அந்த அற்புதங்கள் நிகழ்ந்த இடத்திற்குச் சென்று தரிசிக்க விழைகின்றனர். மக்கள் சென்று அங்கே கோயில் கொண்டிருக்கும் கடவுளையும் கடவுளின் பிரதிநிதியாக நடமாடும் தெய்வமாக விளங்கும் பெரியாரையும், பய பக்தியுடன் வழிபடுகின்றனர். அந்த ஞானச்சித்தரின் அருட் பிரசாதத்தைப் பெருகுவதற்குப் பாத்திரமாகவும் ஆகின்றனர். அவர்களே பாக்கியசாலிகள் என்பேன்.

குறிபபு: 'சாநதவெளி' எனற இநத ஆஞசநேய ஸதலம குமபகோணம தாலுககா விசலூா எனற கிராமததில உளளது. வலங்கைமான எனற ஊருககுக கிழககேயுளள ஆண்டாஙகோயில எனற கிராமத்திறகு வடககே குடமுருடடி ஆறறின வடகரையில உளளது. வலஙகைமானிலிருநது குடவாசல செலலும பஸ மூலம செலலலாம.



## 2. முதல் சந்திப்பு

"தமிழ் நாட்டில் காவிரி பாயும்தென் சீமையிலே, ஒரு பெரியவர் சுற்றிக்கொண்டு இருக்கிறார். அவர் ஓர் அபூர்வப் பேர்வழி. காரைச் சித்தர் என்று அழைக்கப்படுகிறார். அவர் வியக்கத்தக்க அபார சக்தி வாய்ந்தவர். அதைஅவர் எளிதில் வெளிக்காட்டிக் கொள்வதில்லை. எல்லோரிடமும சகஜமாகச் சாதாரண மனிதர்போலத்தான் பழகி வருகிறார். என்றாலும், அவரை அணடியவர்கள் பல நன்மைகளை அடைந்துள்ளனர் என்பது உண்மை. இதைப்பற்றி அவரிடம் எவரேனும பிரஸ்தாபித்தால் எனக்கென்ன தெரியும? நான் ஒன்றும் அறியேன். எல்லாம் அவன் செயல்!" என்று சகஜமாக வினயத்துடன் சிறிதும் கர்வமின்றி, சொல்லி வருகிறார். அவர் மிகவும் இளகிய மனம் படைத்தவர்.

"பிறர் துயர் தீர்ப்பதிலேயே நாட்டம். பக்தர் வேண்டுதலுக்கு இரங்கி அழைக்கும் இடமெல்லாம போவார். பசி, தாகம், உறக்கமின்மை என்று பார்க்கமாட்டார். சதா சுற்றுதல்தான். குடும்பம், வீடு, வாசல், என்று இருந்தும் அவற்றை எல்லாம் துறந்துவிட்ட ஞானி அவர். அவரை நீங்கள் தரிசிக்க வேண்டாமா?" என்று கேட்டார் என் ஆப்த நண்பர் ஒருவர். அவருக்குத் தெரியும் எனக்கு இத்தகைய பெரியோர்களைத் தரிசிப்பதில் அவா உண்டு என்று. மேலும் இறை வழிபாட்டிலும் ஆத்மீகத் துறையில் சஞ்சரிப்பதிலும் எனக்கொரு ஆர்வம் உண்டு எனவும் அறிவார் அவர்.

சுமார் இரண்டு வருடத்துக்கு முன் ஒரு நந்நாள்! அந்தப் பெரியவரை வீட்டுக்கு அழைத்து வந்தார் நண்பர். சித்தருக்கு நாற்பது வயது இருக்கும். கட்டுமஸ்தான தேகம், தலையில் ஒரு முண்டாசு. கண்களிலே ஓர் அபூர்வமான ஒளி. பார்க்கும் போதே 'இவர் அபார

சக்தி வாய்ந்தவர் ; ஆனால் புளியம் பழமும் ஓடும்போல பற்றற்ற நிலையில் இருப்பவர் ; மென்மையான உள்ளம் படைத்தவர். உலகிலே, அபூர்வமாக உலாவி வரும பெரிய மகான்களிலே இவரும் ஒருவர் என்று சித்தர் லட்சணங்களை அறிந்தவர் எளிதில் கூறிவிடுவர்.

அவரை வணங்கி மரியாதையுடன் வரவேற்றேன். அவர் மௌனமாக, கையை நீட்டினர். அவர் வந்தபொழுது வெறும் கையுடன்தான் வந்தார். ஒன்றும் கொண்டுவரவில்லை. ஆனல் எனக்கு நீட்டிய கரத்தில் ஒருபிடி சந்தனத்தூள இருககக் கண்டேன். அப்பப்பா ! அந்த வாசனையைச் சொல்லி முடியாது. அறை முற்றும மணங் கமழத் தொடங்கிற்று. பிரசாதத்தைப் பெறறுக் கொண்டேன் பயபக்தியுடன். 'ஜாக்கிரதையாகப் பிரசாதத்தைப் பத்திரப் படுத்தி வைத்துக கொள்ளுங்கள். ஏதேனும வியாதி, அல்லது மனக்கஷ்டம நேரும போது, ஸ்வாமிகளை நினைத்துக் கொண்டு கொஞ்சம எடுத்து வாயில் போட்டுக் கொள்ளுங்கள் அல்லது இதை நெறறியில் இட்டுக் கொள்ளுங்கள்' என்று கூறினர் ஸ்வாமிகளை அழைத்து வந்த அடியார்.

அன்று முதல், அந்த ஞானசித்தரை அவ்வப்போது தரிசிக்கவும், அவர் தம் குணாதிசயங்களை யறியவும் அவர் விளையாடும் சித்து விளையாட்டுககளை நேரில் கண்டு வியககவும் வாய்ப்புக கிடைக்க லாயிற்று.

அவரைப் பக்தி சிரத்தையுடன் வழிபடத் தொடங்கினேன். ஆனல் அவரோ ஒரு மகனுககுத் தாயிடம் ஏறபடும் அன்பைக் காட்டி 'அமமா' என்றழைத்து என்னுடன் சகஜமாகப் பழகி வந்தார், படாடோபம ஏதுமின்றி.

ஆம் ! உண்மை ! அவருடைய விளையாட்டுக்களையும், பேச்சுக் களையும் பார்க்கும் பொழுது இவர் பால சுப்ரமணியனே அல்லது அந்த மாயக் கண்ணனே என்று வியக்கும்படி இருககும்; எனக்கு மட்டுமல்ல அவரிடம் பக்தி செலுத்துகிற அடியார் அனைவருக்குமே.

ஒரு நாள் சுவாமிகள் திருமுல்லைவாயிலிலுள்ள வைஷ்ணவி கோவிலுக்குச் சென்றார். தேவியின் சேவையில் ஈடுபட்டிருந்த சகோ தரர் அவரை அன்புடன் வரவேற்று உபசரித்து, கோயிலைச் சுற்றிக் காண்பித்தார். தேவியின் பூஜை சமயம் குடலையில் புஷ்பங்கள் மிகக் குறைவாக இருந்தன. 'புஷ்பச் செடிகள் பல வைத்து நந்தவனம் ஏற்படுத்தி இருககிறேன். என்ன பயன்! தேவியின் பூஜைக்கு

வேண்டிய புஷ்பம் இன்று கிடைக்க வில்லையே' என்று வருத்தப் பட்டார், தேவியின் பக்தர்.

“ஏன் அதோ தெரிகிற செடியில் நிரம்ப புஷ்பங்கள் இருக்க லாமே ! குடலையை எடுத்துப் பறித்துவரச் சொல்லுங்கள்” என்றார் ஸ்வாமிகள்.

'என்ன இப்பொழுதுதான் நான் செடியிலிருந்த ஒன்றிரண்டு மலர்களையும் பறித்து விட்டேனே! இனி ஏது மலர் செடியில்?' என்றாள் பக்தரின் மகள்! “இல்லை யம்மா நீ அங்கேபோய் செடியைச் சமீபத்தில் பார்த்தால் தானே தெரியும்? நான் சொல்கிறேன் நீ போய்ப் பாரம்மா!” என்றார் சித்தர். மகள் போய்ப் பார்த்த பொழுது வெற்றுச் செடியாக இருந்தது, முற்றும் பூத்துக் குலுங்கியது. பறிக்கப் பறிக்கக் குடலை நிரம்பியதே தவிர செடியில் பூக்கள் குறையவில்லை. அங்கு அன்று வைஷ்ணவி ஆலயத்தில் கூடியிருந்த பக்தர்கள் அனைவரும் பெரும வியப்பில் ஆழ்ந்து விட்டனர்.

ஒரு சமயம் நான் ஸ்வாமிகளுடன் வெளியூருக்குப் போய் இருந் தேன். நாங்கள் நான்கைந்து பேர் அன்று ஒரு இடத்தில் தங்கினோம். படுக்கை போர்வை எல்லாம் உடன்கொண்டு போயிருந்தோம. ஆனால் ஸ்வாமிகளுக்குப் போர்வை இல்லை. ' இரவு குளிருமே. ஸ்வாமிகளுக்குப் போர்வை இல்லையே!' என்று பேசிக் கொண்டோம். எங்கள் போர்வையில் ஒன்றை ஸ்வாமி களுக்கு எடுத்துக் கொடுப் பதற்கும் சற்றுத் தயக்கமாக இருந்தது. 'நீங்கள் கவலைப்பட வேண்டாம் பாருங்கள்! இன்னும் சற்று நேரத்திற்கெல்லாம் போர்வை வரப் போகிறது' என்று எங்களைப்பார்த்துச் சிரித்துக்கொணடே சொன்னார் ஸ்வாமிகள். சிறிது நேரத்துக்கெல்லாம் இரண்டு நண்பர்கள் ஸ்வாமிகளைத் தேடிக்கொண்டு வந்தார்கள், அவரைத தம் இல்லத்து க்கு அழைத்துச் செல்வதற்காக.

அவர்கள் வந்து சேர்வதற்கும் ஸ்வாமிகள் தோளில் ஒரு புத்தப் புதுப் பட்டு சால்வை தூங்குவதற்கும் சரியாக இருந்தது. எங்க ளுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஆனாலும் சந்தேகம்! “ இப்பொ ழுது நீங்கள் உடன்கொண்டு வந்தீர்களா, சுவாமிகள் போர்த்தியிருக்கும் இந்த சால்வையை?' என்று வந்தவர்களைத் துணிந்து கேட்டு விட்டோம். அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. மலைத்துப் போனார்கள். 'நாங்கள் ஸவாமிக்குக் காணிக்கை ஒன்றும் கொண்டுவரவில்லையே, வெறும் கையுடன் தானே வந்தோம்' என்றனர் வருத்தத்துடன்.

'ஸ்வாமிகள் காணிக்கை ஏதும் பெற்றுக் கொள்ளமாட்டார். குறிப்பிட்ட சிலரிடம் தான் தனக்குத் தேவையானதைக் கேட்டுப் பெற்றுக் கொள்வார். ஆனால் அவர் கும்பகோணம் பக்கம் ஒரு ஆஞ்சநேய ஸ்வாமிகளுக்குப்பாகசாலை, யாத்திரீக விடுதி முதலிய திருப்பணிகளை நடத்தி வருகிறார். அந்தத் திருப்பணிகளுக்கு வேண்டுமானால் உதவினால் பெற்றுக்கொள்வார், என்று சொல்லி, போர்வை பற்றி நாங்கள் கேட்டதன் காரணத்தையும் விளக்கினோம். அன்றைய அற்புத நிகழ்ச்சி அனைவரையும் பரவசமாக்கி விட்டது.

ஒரு நாள் ஒரு இடத்தில் ஸ்வாமிகள் சில நண்பர்களுடன் ஸ்வாரஸ்யமாக பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது திடீரென்று ஏதோ ஞாபகம வந்தவர் போலக் காணப்பட்டார். 'என்ன?' என்று வினவினார்கள் பக்கத்திலிருந்த நண்பர்கள். 'ஒன்றுமில்லை, ஒருவரை இன்று ரயிலடியில் காலை 10-40 மணிக்குச் சந்திப்பதாகச் சொல்லியிருந்தேன. மறந்தே போய்விட்டேன். அவரை அவசியம பார்க்க வேணுமே! இல்லாவிட்டால் அவர் மிகவும வருத்தப்படுவாரே!' என்றார். 'இன்னும அரைமணி நேரம்தான் இருக்கிறது இரயில் நேரத்திற்கு. இப்பொழுது இங்கு வண்டி வசதி ஏதும் இல்லையே! டாக்ஸி கூட கிடைக்காதே! எப்படிப் போக முடியும?' என்றனர் நண்பர்கள். ஸ்வாமிகள் இருக்கும் இடத்திற்கும், ரயில் ஸ்டேஷனுக்கும் சுமார் 15 மைல் இருக்கும. ஸ்வாமிகள் யோசித்தார் போலும். சில விநாடிகளுக்கு எல்லாம அவர் 'இதோ வருகிறேன்' என்று நண்பர்களிடம சொல்லிவிட்டு, தோட்டத்துப் பக்கம சென்றார். பிறகு சுமார் ஒருமணி நேரம் கழித்து வந்து சேர்ந்தார். மறு நாள் சில நண்பர்கள் வந்து, முன் தினம காலை சுமார் 10½ மணிக்கு ஸ்வாமிகளை ரயிலடியில் கண்டதாகச் சொன்னார்கள். இதைக்கேட்ட ஸ்வாமிகளின் அடியார் அனைவரும் வியப்புற்றனர். ஸ்வாமிகளைக் கேட்டதில், தான் ரயிலடிக்குச் சில நண்பர்களைக் காணச் சென்றது உண்மை என்று ஒத்துக் கொண்டார். ஆனால் அந்த ஒரு மணி நேரத்திற்குள் எப்படிப்போய்த் திரும்பினார் என்று விளங்கவில்லை. அது அனைவருக்கும புரியாத புதிராகவே இருக்கிறது, இன்றுவரை.

ஒரு நன்னாள் என்னிடம் ஒரு அருமையான பூஜைப் பொருளைக் கொடுத்து பூஜையில வைக்கும்படி சொன்னார். பிறகு ஒரு நாள் சில பக்தர்களுடன் பேசிக் கொண்டிருக்கும பொழுது என்னிடம் கொடுத்த அதே பொருளைக் கையில் வைத்துககொண்டு அவர்களுக்குக் காட்டினார் என்று தெரிய வந்தது. என்ன விந்தை!

அந்தப் பொருள் என் பூஜையில் இருக்கத்தான் செய்தது. சுவாமி களை நேரில் கேட்டபொழுது சிரித்தார். 'நான் எங்கே காட்டினேன்? அவர்களாக நினைத்திருப்பார்கள்; மனதில் கற்பனை செய்திருப்பார் கள்' என்றார்.

ஸ்வாமிகள் ஒரு சமயம் நண்பர்களுடன் திருக் கோவிலூருக்குச் சென்றார். ஊருக்குள் செல்லும பொழுது வழியில் ஒரு நாவிதன் வீட்டு வாயிலில் இறங்கிக்கொண்டு, 'நீங்கள் போய் வாருங்கள். எனககு இங்கே வேலை இருக்கிறது' என்றாராம. நண்பர்கள், சென்ற வேலையை முடித்துக் கொண்டு திருமபி வந்து பார்த்த பொழுது ஸ்வாமிகள் அந்த நாவிதன் வீட்டிற்கு முன்னிருந்த தென்னை மரத் திலிருந்து தேங்காய்களைப் பறித்துப் போட்டுக் கொண்டிருந்ததைக் கணடனர். நாவிதனுக்கு அவர் அவன் கிராமத்தைச் சேர்ந்தவராகவே காணப்பட்டாராம. அவனுடன் பல பழையசம்பவங்களைப் பற்றிப் பேசிககொண்டிருந்ததாக நண்பர்கள் கூறினர்.

ஸ்வாமிகள் சதா சுற்றிக்கொண்டு இருக்கும் காரைக்கோட்டை, வடுவூர் முதலிய கிராமங்களில் வாழும் பல ஏழைக் குடியான மக்க ளுடன் தோழமை பூண்டு உறவாடி அவர்களுக்கு விறகு வெட்டிக் கொடுப்பது, குடிசை கட்டுவதில் உதவுவது போன்ற பல பணி களைச் செய்து வருவது வழக்கம் என்று அவருடைய பால்ய நண் பர்கள் கூறக் கேட்டிருககிறேன்.

முறறும துறந்த முனிவரான ஸ்வாமிகளுக்கு, ஏழை பணககாரன் என்ற தாரதமமியம் கிடையாது. பார்ப்பனர் தாழந்த சாதியார் என்ற வித்தியாசமும கிடையாது.

ஆஞ்சநேயமூர்த்தி சந்நிதி யில் தான் சுவாமிகள் பெரும்பாலும் காணப்படுவார். அந்தப் பக்கத்துக் கிராமங்களில் உள்ள ஏழை மக்க ளுக்கு ஸ்வாமிகள் ஒரு பிரத்யட்ச தெய்வம் எனலாம. எத்தனையோ பேர் தீராதநோய்களை உடையவர்கள் அங்கு வந்து ஸ்வாமிகளின் அனுக்ரஹம் பெற்று சுகம் அடைந்துள்ளார்கள். ஸ்வாமிகள் எப் போதும் சுற்றிக்கொண்டே இருப்பார். பல மைல்கள் வயல் களிலும் வரப்புக்களிலும் நடந்து சென்று பக்தகோடிகளின் துயரைத் தீர்க்கச் செல்வார்.

ஒரு சமயம் இடைவிடாமல் மழை பெய்து கொண்டு இருக் கையில் சில சென்னை நண்பர்கள் சாந்தவெளிக்குச் சென்று இருந்தனர். ஸ்வாமிகள் அவர்களுடன் அளவளாவிக் கொண்டி

ருந்தார். அப்பொழுது 'இதோவந்துவிட்டேன்' என்று கைத்தடியை எடுத்துக் கொண்டு வெளியில் போனார். 'இந்தக் கொட்டும் மழையில் எங்கு போகப்போகிறார்' என்று நண்பர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஆனால் காலையில் 10 மணிக்குச் சென்ற சுவாமிகள் மாலை 6 மணிக்குத் தான் திரும்பி வந்தார். பிறகுதான் விஷயம் தெரியவந்தது. ஒரு மைலுக்கு அப்பாலுள்ள விசலூர் என்ற கிராமத்தில் ஒரு பக்தருடைய அன்னையார் நோய்வாய்ப்பட்டிருந்தாராம். அந்த அம்மையாருக்கு தைரியம் சொல்லி மருந்து கொடுக்கப் போனாராம். அந்தக் கொட்டும மழையில் - வெள்ளக்காடாய் இருந்த பாதையில் ஸ்வாமிகள் எப்படிப் போய் வந்தார் என்று ஆச்சரியப்பட்டனர் அடியார்கள்.

ஒரு நாள் சாந்தவெளிக்கு ஓர் ஏழைப் பெண்மணி–30 வயது இருக்கும–4 குழந்தைகளுடன் வந்து சேர்ந்தாள். அவளுடைய புருஷன் சரியாக இல்லாததால், தன்னுடைய குழந்தைகளை ஆற்றில் தள்ளிவிட்டுத் தானும் விழுந்துவிடப் போவதாக அழுது கொண்டே வந்தாள். ஸ்வாமிகள் அவளை அங்கேயே தங்கச் சொல்லி அவர்களுக்குச் சாப்பாட்டுக்கும் ஏற்பாடு செய்தார். ஒருவாரம் அந்தக் குடும்பம் அங்கேயே ஆஞ்சநேயர் சந்நிதியில் தங்கி இருந்தது. ஏழாவது நாள் அந்தப் பெண்மணியின் புருஷன் தானாக வந்து ஸ்வாமிகளின் முன்னிலையில் வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தன் குடும்பத்தைக் கூட அழைத்துக்கொண்டு போய் விட்டான. இப்படியே தினமும் எத்தனையோ ஏழை மக்கள் ஸ்வாமிகளின பேரன்புககும் கருணைக்கும் பாத்திரர்களாகி நல்வாழ்வு பெறுகிறார்கள்

மண்ணையும பொன்னையும் சமமாகக் கருதும் பெரியோர்களை, தானே வலுவில் வந்தடைகின்றன அஷ்டமா சித்திகளும. அவர்களோ கைககெட்டிய இந்தச் சித்திகளைப் பொருட் படுத்துவதில்லை. 'இதுவல்ல! இதுவல்ல!' நான் தேடும் பொருள்! என்று ஞான சித்தர் அவற்றை அறவே புறக்கணித்து விடுகிறார். அவரே அந்தப் பரம் பொருளைக் காணும் பேறு பெறுகிறார். எனினும், அவசியம் வந்தபோது மக்கள உய்வதற்காக சித்தி விளையாடிக்காட்டவும் செய்கிறார். மண்ணைப் பொன்னாக்குகிறார். சாதாரணப் பச்சிலையைச் சிறந்த ஔஷதமாகச் செய்து விடுகிறார். பித்தனை பக்தனாகவும், பாமரனைப் பண்டிதனாகவும், மாற்றுகிறார். பிரிந்தோரைக் கூட்டிவைக்கிறார். அத்தகைய சித்தர் பரம்பரையில் வந்தவர்தான் பகவான் ஸ்ரீ காரைச் சித்தர்.

# 3. வாழ்க்கை வரலாறு

பழம்பெரும் நாடான நம்முடைய பாரத நாடு மிகப் பெருமை வாய்ந்த நாடு. இந்நாட்டின் பெருமை தனிப்பட்டது; வேறு எங்கணும காணாத வியப்புடையது. இங்குந்தான் மன்னர்களும் மா வீரர்களும இருந்தனர். ஆனால் அவர்களோடு அவர்களுடைய அரண்மனை களும், கோட்டைகளும், அரண்களும், போர்க்களங்களும் அடியோடு மறைந்து விட்டன. எனினும, அவர்கள் கட்டிய ஆலயங்கள் அழிய வில்லை. ஆண்டவனது திரு உருவங்களும, அவற்றைப் பாடிய அன்பர்களின் திருப்பாடல்களும், அவ்வாலயங்களைச் சேர்ந்த அறச் சாலைகளும், தவச்சாலைகளும், அறநெறித் தூபிகளும் இன்றும நம நாகரிகத்தின் ஆணிவேர்களாகத் திகழ்கின்றன.

அதாவது, நம் நாட்டுப் பண்பாடு வேந்தனையோ, வீரனையோ சிறுமை செய்யவில்லை. ஆனால் வேதாந்தியை, துறவியை, ஞானி யைப் பெருமைப் படுத்துகிறது. "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்று துணிந்து கூறுவதைப்போல் உள்ளது. பாரத பூமி கர்ம பூமி மட்டும் அல்ல, தர்ம க்ஷேத்திரம், ஞான பூமி, தவத்தின் பிறப்பிடம், பக்தியின் இருப்பிடம், சித்திகளின் சேம நிதி, முக்திக்குக் கருவூலம. வேதங்கள், உப நிடதங்கள், தர்ஸனங்கள், இராமாயண, பாரத இதி ஹாஸங்கள், ஸ்மிருதிகள், தர்ம சாஸ்திரங்கள், ஆகமங்கள், தந்திரங் கள், புராணங்கள், யாவும் மேற் கூறிய உண்மைகளின் அத்தாட்சி களே யாகும். இந் நாடு வேத ரிஷிகள் முதல் மகாத்மா காந்தி வரையில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, அடுத்தடுத்து மகான் களுக்குத் தாயகமாய் விளங்கி வந்து இருக்கிறது.

கண்டு அனுபவிக்கும் உலகம் பெரிதுதான்; எனினும் அந்த உலகத்துக்கு ஆதாரமான காணமுடியாத கடவுளைக் காண்பதே வாழ்வின் பெரு நோக்கம். அக் கடவுட் காட்சியோடு இவ்வுலகத் தைக் காணும்போது இவ்வுலகமே சைதன்யமாக மாறி விடுகிறது. "நேதி நேதி" எனக் "கண்டன வெல்லாம் அல்ல என்று கண்டனை

'அஹம் ப்ரஹ்ம மாஸ்மி' 'சிவோஹம்' 'ஸோஹம்' 'ஸா ஹம்' என்று 'ஸ்வாத்மாவை ஸர்வபூதாத் மாவான ஈஸ்வர சைதன்யமாகக் கொண்டு, அத் தெய்விகக் காட்சியிலே "கண்டனவெல்லாம் மோன உரு வெளியது ஆகவும் கருதி" 'அவன் நான், நான் அவன்" என்னும ஐக்கிய பாவத்திலே, அருட்பெரும் ஜோதி வள்ளலாரைப் போலவே,

சிற்சபையும் பொற்சபையும் சொந்தமென தாச்சு
தேவர்களும் மூவர்களும் பேசுவதென் பேச்சு
இச்சமய வாழ்விலெனக் கென்னையினி ஏச்சு
என்பிறவித் துன்பமெலாம் இன்றேடே போச்சு

என்னும் மகா ஞான சித்தர்கள் இந்நாட்டில் எப்போதும், எங்கோ அங்குமிங்குமாக இருக்கத்தான் செய்கிறார்கள். அத்தகைய உத்தம ஞான சித்தர் பரம்பரையிலே வந்தவர்தான் காரைக்கோட்டை ஸ்வாமிகள் என்று அழைக்கப்பெறும நம காரைச் சித்தர்.

இம் மஹான் 1918-ம் ஆண்டு திருவனந்தபுரத்தில் பிறந்தார். எனினும இவரது சொந்த ஊர் கும்பகோணத்தை அடுத்து, குட முருட்டி ஆற்றின் கரையில் உள்ள நாகரஸமபேட்டை என்னும் ஒரு சிற்றூராகும். அவரது தந்தை ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் வடமொழி யில் தேர்ந்த அறிவாளி. குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தாலும, பற்றற்று, அதிவர்ணாஸ்ரமியாகவே வாழ்ந்தார். மேலும் வருங்காலம் உரைத்தல் போன்ற அதிசயமான அனுக்கிரக சக்திகளையும் பெற்றிருந் தார். அவருடைய மனைவியார் ருகமணி அமமாள். அவர்களுககு நான்கு ஆண் குழந்தைகளும், இரண்டு பெண் குழந்தைகளும் பிறந்தனர். அவர்களுள் இரண்டாவது குமாரர்தான் நமது ஸ்வாமிகள்.

இளம்பிராயத்திலே ஸ்வாமிகள் பள்ளிப் படிப்பில் இஷ்டமின்றி விளையாட்டிலும் வேடிக்கையிலும பொழுதைக் கழித்தார். யாருக்கும் அடங்காத இளைஞனை தாய் தன்னுடைய சகோதரியான செல்லம்மா ளுடைய இல்லத்திற்கு, காரைக்கோட்டை கிராமத்துக்கு அனுப்பிவைத்தார். ஸ்வாமிகளுக்கு சிற்றன்னையின் வீடே சொந்த வீடாயிற்று. அங்கு போயும இளைஞன் திருந்தவில்லை. பள்ளிப் படிப்பு அவருக்கு வேம்பாய் இருந்தது. அந்தக் காலத்திலேயே அவருக்கு அசாதாரணமான சக்திகள் இருந்தனவாம். பன்னிரண்டு வயதாகும்போது வீட்டைவிட்டு ஓடினார். வடக்கே இமயமலை வரை யில் சுற்றிக் திரிந்து விட்டு, மூன்று ஆண்டுகளுக்குப்பின் தெற்கே திரும்பினார். திருப்பதி மலைக் காட்டுக்குள் ஓராண்டு சுற்றினார்.

அதன் பிறகு சொந்த ஊரான நாகரசம்பேட்டைக்குத் திரும்பி, குடும்பப் பொறுப்புகளை ஏற்று நடத்தினர். ஆயினும் அவருடைய கொள்கைகளும் நடை உடை பாவனைகளும் அசாதாரணமாய்' இருந் தன. அவருக்கு ஜாதி, மத வித்தியாசம் இல்லை. எல்லா வகுப்பினருடனும் நெருங்கிப் பழகினர். அவருக்கு குஸ்திச் சண்டையிலும், குத்துச் சண்டையிலும் அபார மோகம். எப்பொழுதும் பல வகுப் பாரான நண்பர்களுடன் சுற்றித் திரிவதும், நினைத்த இடத்தில் சாப்பிடு



வதும், அவருடைய போக்கு, சுற்றத்தாருக்கும், ஊரில் உள்ள முதிய வர்களுக்கும் பிடிக்கவில்லை.

ஏற்கனவே அவருடைய மூத்த சகோதரர் இளம் பிராயத்திலேயே துறவு பூண்டு எங்கோ சென்று மறைந்து விட்டார். அதனுல் குடும பத்தின் மூத்த குமாரன் என்ற பெரும் பொறுப்பு ஸ்வாமிகளின் தலையில் விழுந்தது. அதனுல் அன்னையின் ஆணையைச் சிரமேற கொண்டு நம் ஸ்வாமிகள் விவாகம் செய்து கொள்ளச் சம்மதித்தார்.

அவருக்கு மனைவியாக வாய்க்கப் பெற்ற சுலோசனு என்ற அம்மையார், வள்ளுவருக்கு வாசுகி போலவும், வசிஷ்டருக்கு அருந்ததி போலவும், அவரது தெய்விகத் தவ வாழ்க்கைக்கு ஏற்ற தேவியாகத் திகழ்கிருர். இத் திருமணத்தின் மூலம் ஸ்வாமிகளுக்கு ரேணுகா என்ற புதல்வியும ரவிகுமாரன் என்ற புத்திரனும் உள்ளனர்.

ஸ்வாமிகள், பூனவில் அரசாங்க ஆயுதச் சாலையில் சிறிது காலம் பணியாற்றினர். அப்போது எல்லாம தம் கடமையை உணர்ந்து, எல் லோரையும் போலவே இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார். எனினும், அவருடைய உள்ளத்தில் ஊறியிருந்த ஆன்மிக வேட்கை அவரை இருக்க விடவில்லை. சுற்றித் திரியும் பைத்தியம் பற்றிக் கொண்டது. மலேயா, இலங்கை முதலிய நாடுகளில் அலைந்து திரும்பினர். திரும்பியதும் வர்தா சென்று, மகாத்மா காந்தி அடிகளுடன் சில மாதங்கள் தங்கினர். வடக்கே இமயமலை வரையில் சென்ருர்.

அங்கு லக்ஷ்மன்ஜுலாவில் ஓர் அதிசய மகானைச் சந்தித்தார். அவரைக்கணட உடனே ஸ்வாமிகளுக்கு அவரிடம் அபார பக்தியும் மதிப்பும் ஏற்பட்டது. அந்தப் பெரியார் ஸ்வாமிகளை நோக்கித் தன்னுடைய முதுகில் காலால் எட்டி உதைக்குமபடி சொன்னர். அதன் மூலம் தன்னுடைய முதுகு வலி தீர்ந்துவிடும் என்று சென்னர். இந்த விசித்திர ஆணையைக் கேட்டு தயங்கிய ஸ்வாமிகள், மீண்டும் அவர் வற்புறுத்தவே பெரியவரின் முதுகில் ஓங்கி உதைத்தார். அடியின் வேகத்தால் தாக்குண்ட பெரியவர் கரையிலிருந்து தவறி ஆற்றுக்குள் விழுந்து விட்டார். ஆனல் முதுகு வலி நீங்கப் பெற்று மீண்டும் கரை சேர்ந்து ஸ்வாமிகளை வாழ்த்தினர். அந்த மகான்தான் ஸ்வாமிகளின் குருவானர்.

வட இந்தியாவிலிருந்து ஊர் திரும்பிய ஸ்வாமிகளுக்கு நண்பர் களும் சீடர்களும் சூழ்ந்தனர். அவரிடம் அன்பு பூண்ட நண்பர் ஒருவர் ; ரகுநாதன் என்று பெயர் ; கள்ளர் குலத்தைச் சேர்ந்த அவருக்கு ஸ்வாமிகளிடம் அளவு கடந்த ஈடுபாடு. அதனல் அந்த அன்பர் தம்முடைய சொத்து பூராவையும் ஸ்வாமிகளின் பெயருக்கு எழுதிவைத்தார். ஆனல் அந்த அன்பர் இறந்ததும் ஸ்வாமிககள் அந்த சொத்தை எல்லாம் அவர் குடுமபத்தினருக்கே மாற்றி விட்டார். மதிப்பற்ற மெய்ஞான செல்வத்தைப் பெற்ற அவருக்கு பொய்யான இந்த உலகத்துச் செல்வம் எதற்கு ?

உலக மக்களோடு ஒன்ருய்ப் பழகினும், அவர் உலக வாழ்க்கை யில் ஒட்டாத பற்று அற்ற ஞானச் செல்வர். அவருடைய உண்மை

நிலையை உணர்ந்த அவருடைய குடும்பத்தினர் அவரை தெய்வமாக எண்ணி வழிபடுகின்றனர். அவருடைய வாழ்க்கையே வேதாந்த தத்துவத்தின் பேருண்மையை எடுத்துக் காட்டும் இலக்கிமாய் விளங்குகிறது.

அவரைப் பார்த்தோர் யாரும் சாதாரணமாக அவருடைய மேன்மையை உணரமாட்டார்கள். மிகவும் எளிய சுபாவம்; இனிய பேச்சு ; புன்முறுவல் தவழும் முகம். ஆனால் அவருடைய பெரியவட்ட விழிகள்—உள்ளத்தின் பேரொளியை எடுத்துக்காட்டுவது போல், சுடர் விட்டுப் பிரகாசிக்கும் ; ஒரு சமயம், குறும்பு தெரிக்க உருண்டு சலிக்கும் ; மறு சமயம் எதிர் நோக்க இயலாதபடி உறுத்து விழிக்கும். மறு கணம் அலை ஓய்ந்த ஆழ்கடலைப் போல் அமைதியே உருவாகக் காட்சி அளிக்கும். ஆனால் எப்போதும் அந்த விழிகளில் தேங்கியுள்ள கருணைப் பிரவாகத்தை வர்ணிக்கவே முடியாது.

கடவுளே மனித உருவில் வந்ததைப் போல் நம்மிடையே வந்து, தமமுடைய அளவற்ற கருணைத் திறத்தால் யாவருக்கும் அன்பு காட்டி, அருள் புரியும ஆண்டவராய் விருப்பு வெறுப்பற்று விளை யாடும வேதாந்த மஹரிஷியாய் விளங்கும பகவான் ஸ்ரீ காரைச் சித்தர் அவர்களை வணங்கி வழிபட்டு, அவரது அருளால், அவ்வரு ளின்படி நிற்போமாக.



# 4. கனக வைப்பு

பகவான் ஸ்ரீ காரைச் சித்தர் அவர்கள் அருளிய நூல் தான் "கனகவைப்பு." பதினைந்து பகுதிகளாகப் பிரிந்து, 390 பாடல்களைக் கொண்ட அந்நூல் நம் தமிழ் நாட்டு சித்தர் பாடல்களைப் போலவே அந்தப் பரம்பரையில் வந்ததுதான். ஆயினும், தேனென இனிக்கும் எளிய தமிழில் உள்ளன பாடல்கள். செம்பைப் பொன்னுக்கும் சித்தர் வாத வித்தையைக் கூறினும், அது முக்கியமாக கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞான மார்க்கம், யோக மார்க்கம், ஆகிய எல்லா ஆன்மீகத் துறைகளுக்கும் வழிகாட்டும் வேதாந்த தத்துவ ஞானப் பொக்கிஷமாக விளங்குகிறது.

உதாரணமாகக் கீழ்க்கண்ட பாடல்களைக் எடுத்துக் காட்டுகிறேன் :- -

1. சித்தி தரு கிறவல்லி சிவகாமித் தாய்
 சேகரத்தே மீசுரத்தே சிறந்து நிற்பாள்
 புத்தியினிற் கால்வைத்தாள் போதத் துற்றாள்
 போக்கு வரவில்லாத பூரணத்தாள்
 பத்தினியாள் பழங்கிழவி யென்றென்றைக்கும்
 பத்துவயதாக நிற்பாள் பரத்தி வேசி
 சித்தர்கள் தாய் சித்த மணிப் பீடத்துள்ளாள்
 தேவியவள் வாலைப் பெண் காப்பே காப்பு.

(காப்பு—3)

2. வல்லவினைத் தொல்லையெலாம் மாறிப்போக
 வழி வகுத்தான் கும்பமுனி யகத்தி யந்தான்
 வல்லதொரு போதைகளும் போதமாக
 மாசித்தன் போகமுனி மார்க்கம் சொன்னான்
 வல்லமையாற் சொல்லுக்குள் சொல்லை வைத்து
 வள்ளுவனும் மர்மத்தின் மர்மம் சொன்னான்
 வல்ல தொரு மூலத்தைப் பாலம் போட்டு
 வகை செய்தான் திரு மூலச்சித்தன் தானே

(பீடவைப்பு — 39)

3. பயனில்லாச் சொல்லகற்றிப் பயனே கூறல்
பயனதையு மினிதான பழமாய்ச் செப்பல்
நயனில்லாக் கடுவழிகளவை விட் டோடல்
நாட்ட மெலா மருள் நாட்ட மாகக் கொள்ளல்
அயனில்லா தெவை யுந்தானுகக் காணல்
அத்து விதத்தா லின்பச் சித்தம் பேணல்
இவை யெல்லா மருங்குணமா மீசற் கன்பாம்
இடர் நீககிச் சுடர் காட்டும் நியமந்தானே.
(ஆன்மைவைப்பு—51)

4. தேவாரம் வாசகந்தான் திகழக் கூட்டி
திருவாயின் மொழி யெல்லா முருவாய்ச் சேர்த்து
போவாரைப் போகாரைப் புலம்ப வைத்து
போக்கற்றுர் தமக்குமொரு போக்குக் காட்டி
கோவாரம பூவாரம் கொழிக்க விட்டு
கோலமுறச் செய்தாலும் குவலயத்தின்
பூ பாரம் குறைந்திடுமோ குறைக் கொண்ணுது
புகன்றிட்டேன் அவள் போக்கைப் புகன்றிட்டேனே!
(மணிவைப்பு—110)

5. அன்னமிடும் மின்னிடையா ளகண்ட சக்தி
ஆங்காலம் போங்கால மனைத்து மாவாள்
பின்னமிலைப் பயமில்லைப் பேத மில்லை
பேச் செல்லாம் செயலெல்லாம் வெற்றி கணாய்
இன்னினியா ளிலக்கு வனின் சேவை கொண்டாள்
என் சேவை யிலக்கணமு மிவளே கண்டீர்
மன்னினியாள் வாலைப் பெண மாதா சக்தி
மனேன்மணிகங் காளிமகா மாயி யாத்தாள்
(மை வைப்பு—119)

6. எத்தனையோ நெறியெல்லாம் எடுத்து ரைத்தேன்
என் மகனே என் சொல்லைக் கேட்பா ரில்லை
பத்தரைக்கும் குறையாத மாத்துக் கண்டாய்
பன்னிருகை வேலனவன் பாதந் தன்னில்
சித்தினுடை சித்தினையும் சித்த மாக்கிச்
சிவசிவா சிகரத்தி லேறி நின்றால்
வித்தறிவாய் விதி விலகும் வினையும் போகும்
வேதாந்த சித்தாந்த வெளியுண்டாகும்
(வாத வைப்பு—143)

# 4. கனக வைப்பு

பகவான் ஸ்ரீ காரைச் சித்தர் அவர்கள் அருளிய நூல் தான் "கனகவைப்பு." பதினைந்து பகுதிகளாகப் பிரிந்து, 390 பாடல்களைக் கொண்ட அந்நூல் நம் தமிழ் நாட்டு சித்தர் பாடல்களைப் போலவே அந்தப் பரம்பரையில் வந்ததுதான். ஆயினும், தேனென இனிக்கும் எளிய தமிழில் உள்ளன பாடல்கள். செம்பைப் பொன்னுக்கும் சித்தர் வாத வித்தையைக் கூறினும், அது முக்கியமாக கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞான மார்க்கம், யோக மார்க்கம், ஆகிய எல்லா ஆன்மீகத் துறைகளுக்கும் வழிகாட்டும் வேதாந்த தத்துவ ஞானப் பொக்கிஷமாக விளங்குகிறது.

உதாரணமாகக் கீழ்க்கண்ட பாடல்களைக் எடுத்துக் காட்டுகிறேன் :- -

1. சித்தி தரு கிறவல்லி சிவகாமித் தாய்
சேகரத்தே மீசுரத்தே சிறந்து நிற்பாள்
புத்தியினிற் கால்வைத்தாள் போதத் துற்றாள்
போக்கு வரவில்லாத பூரணத்தாள்
பத்தினியாள் பழங்கிழவி யென்றென்றைக்கும்
பத்துவயதாக நிற்பாள் பரத்தி வேசி
சித்தர்கள் தாய் சித்த மணிப் பீடத்துள்ளாள்
தேவியவள் வாலைப் பெண் காப்பே காப்பு.

(காப்பு—3)

2. வல்லவினைத் தொல்லையெலாம் மாறிப்போக
வழி வகுத்தான் கும்பமுனி யகத்தி யந்தான்
வல்லதொரு போதைகைகும் போதமாக
மாசித்தன் போகமுனி மார்க்கம் சொன்னான்
வல்லமையாற் சொல்லுக்குள் சொல்லை வைத்து
வள்ளுவனும் மர்மத்தின் மர்மம் சொன்னான்
வல்ல தொரு மூலத்தைப் பாலம் போட்டு
வகை செய்தான் திரு மூலச்சித்தன் தானே

(பீடவைப்பு — 39)

3. பயனில்லாச் சொல்லகற்றிப் பயனே கூறல்
பயனதையு மினிதான பழமாய்ச் செப்பல்
நயனில்லாக் கடுவழிகளவை விட் டோடல்
நாட்ட மெலா மருள் நாட்ட மாகக் கொள்ளல்
அயனில்லா தெவை யுந்தானுகக் காணல்
அத்து விதத்தா லின்பச் சித்தம் பேணல்
இவை யெல்லா மருங்குணமா மீசற் கன்பாம்
இடர் நீக்கிச் சுடர் காட்டும் நியமந்தானே.
(ஆன்மைவைப்பு—51)

4. தேவாரம் வாசகந்தான் திகழக் கூட்டி
திருவாயின் மொழி யெல்லா முருவாய்ச் சேர்த்து
போவாரைப் போகாரைப் புலம்ப வைத்து
போக்கற்றுர் தமக்குமொரு போக்குக் காட்டி
கோவாரம் பூவாரம் கொழிக்க விட்டு
கோலமுறச் செய்தாலும் குவலயத்தின்
பூ பாரம் குறைந்திடுமோ குறைக் கொண்ணுது
புகன்றிட்டேன் அவள் போக்கைப் புகன்றிட்டேனே!
(மணிவைப்பு--110)

5. அன்னமிடும் மின்னிடையா ளகண்ட சக்தி
ஆங்காலம் போங்கால மனைத்து மாவாள்
பின்னமிலைப் பயமில்லைப் பேத மில்லை
பேச் செல்லாம் செயலெல்லாம் வெற்றி கண்டாய்
இன்னினியா ளிலக்கு வனின் சேவை கொண்டாள்
என் சேவை யிலக்கணமு மிவளே கண்டீர்
மன்னினியாள் வாலைப் பெண் மாதா சக்தி
மனேன்மணிகங் காளிமகா மாயி யாத்தாள்
(மை வைப்பு—119)

6. எத்தனையோ நெறியெல்லாம் எடுத்து ரைத்தேன்
என் மகனே என் சொல்லைக் கேட்பா ரில்லை
பத்தரைக்கும் குறையாத மாத்துக் கண்டாய்
பன்னிருகை வேலனவன் பாதந் தன்னில்
சித்திஞெட சித்தியையும் சித்த மாக்கிச்
சிவசிவா சிகரத்தி லேறி நின்றுல்
வித்தறிவாய் விதி விலகும் வினையும் போகும்
வேதாந்த சித்தாந்த வெளியுண்டாகும்
(வாத வைப்பு—143)

7. பாரில்லேன் பார்த்தேனில்லை பாவங்கள் புரிந்தேனில்லை
பதறினேன் மனம் தளர்ந்தேன் பருகினேன் பல நூல் சாரம்
ஊரில்லேன் காணியில்லேன் உறவு மற்றொருவரில்லேன்
ஊசியாம் காந்தவுச்சி ஒளியிலே கண்ணன் தன்னைக
காருள்ளே கதிராய்ப் பொங்கும கண்மணி வண்ணன் தன்னை
காற்றிலே காற்றாய் ஜீவக் கதி யென்னும் ரதத்தை ஓட்டி
ஏருள்ளே எந்தனுள்ளே என்னகச் சொந்தனாக
எம் பிரானிருப்பான் காப்பான் இல்லையேற் காத்திடானோ
(யோக வைப்பு—147-148)

8. நினைத்ததெலாம் நினைத்தபடி பெறுவான் ப்ராப்தி
நெறிகணடான் குறைகணடான் நிறைவான் சித்தன்
நினைத்ததெலாம நினைத்தபடி செயுமப்ரா காம்ய
நிலை நின்றான் தலைநின்ற னவனே சித்தன்
நினைத்ததெலாம நினைத்தபடி வசியஞ் செய்வான்
நினைவுநடத் தும்வசித்வ நிலயங கண்டான்
நினைத்ததெலாம நினைத்தபடி படைப்பான் காப்பான்
நீக்கி மறைத் தேயருள்வா னீசத்வத்தால்
(ஞானவைப்பு—241)

9. கண்ணுக்குக் கண்ணாவான் காட்சியாவான்
காணபவனும் காண்பதுவு மவனே யாவான்
எண்ணுக்கு ளெண்ணவா னெண்ணமாவான்
எண்ணுபவ னெண்ணு பொருள் யாவுமாவான்
மண்ணவான் தண்ணவான் மாத்தீ யாவான்
வளியாவான் வெளியாவான் வண்ணமாவான்
பெண்ணவான் ஆணவான் பேடியாவான்
பேச்சாவான் பேச்சற்ற பெரியோன் தானே
(கடவுள் வைப்பு—249)

10. நீதியெல்லாம் நெறியெல்லாம் நீங்கிப் போக
நிண்ணயங்க ளவைமாறி நிலைகெட் டோடச்
சாதிமத பேதமெலாம் தான்மிக்கோங்கத்
தர்மமெலாம கர்மமெலாம் தகையற்றேங்க
ஓதுறுமந் தணரொழுக்கம் உளுத்துச் சாக
உலகமெலா மகங்காரத் தொடுங்கி வேக
ஆதரவா மாத்திகமும் மறைந்து போகும்
அப்பப்பா நாத்திகந்தான் வெறி கொண்டாடும.
(கடவுள்வைப்பு—245.)

11. ஆத்திகந்தான் மறைந்திட்டா லவனியுள்ளோர்
ஆணவத்தி னலெதற்கு மஞ்சா ரஞ்சார்
ஆத்திறமாங் கொடுங்காமம் க்ரோதம் லோபம்
ஐயையோ கடுமோஹம் மதமாச்சர்யம்
தீத்திறமே வாழ்வெல்லாம் செயற்கையாகும்
ஜெனனத்தை யுந்தடுக்கச் செப்பும் கப்பும்
சூத்திரந்தான் கலியாட்டும் பொம்மலாட்டச்
சூக்கமதைக் கண்டுமுறு வலிப்பார் சித்தர்.
(கடவுள் வைப்பு—246.)

12. எத்தனைதா னிருந்தாலு மென்னே யென்னே
இருக்குமிட மிருப்பிடமா யில்லை யென்றல்
எத்தனைதான் சிந்தித்தும் பயன்தா னென்னே
இறையளவும் மோனநிலை யில்லை யென்றல்
எத்தனைதான் வந்தித்தென் நிந்தித் தென்னே
ஈசனருளாங் கவச மில்லை யென்றல்
அத்தனையும் பாழாகும கந்தனென்பாய்
அவனருளால் பாவமெலாம விலகிப் போமோ
(கடவுள் வைப்பு—252)

13. இறையவன் கோயில்காண இறைகுண மறியவேண்டும
இறையவன் ஞானமென்று மென்றென்றும் சுயம்ப்ரகாசம
இறையவன் சக்தியெங்கும இணைந்திணை யாதுநிற்றல்
இறையவன் வலியெவைக்கும யாவையும தாங்குமவீறு
(இல்லற வைப்பு—260)

14. காலமெலாம் தேசமெலா முணவாக் கொண்டு
காலத்தை யுண்டுமிழ்வாள் கால காலி
காலனுக்கும் காலனடா கண்ணுச்சாமிக்
காதலனைப் பெற்றெடுத்தாள் தங்கையானுள்
காலனைக் கொல் காலனுக்கே மகளாய் வந்தாள்
கைவசமாய்க் கணவனெனக் கலந்து கொண்டாள்
காலமிலாக் காலமெலாம் தானுய் நிற்பாள்
ககனமெலாம் பெற்றெடுத்தும் கன்னியாவாள்
(மந்திர வைப்பு—306)

15. மாளாத சக்தியடா மனிதன் சக்தி
மலிவாகக் கிடக்குதடா மனத்துக் குள்ளே
மீளாத மார்க்கமடா மின்னுத்தாளே
மேவியுனக் குட்காணும் வேதை மார்க்கம்
ஆளாக வென்றேனு மெப்போதேனும்
அனைவர்க்கும் கிட்டுமடா ஞானப்பேறு
தூளாகக் காமத்தைத் துரத்தி விட்டே
துணையாகக் கம்பத்தே தூங்குவாயே

(ஆன்ம வைப்பு—43)

